

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தொண்டரடிப்பொடியாழ்வார்

## வைபவம்.

கோதண்டே ஜ்யேஷ்ட்ட நக்ஷத்ரே மண்டங்குடிபுரோத்பவம்-
சோளோர்வ்யாம்வநமாலாம்ஸம் பக்தபத்ரேணுமாஸ்ரயே.

---

இவ்வாழ்வார், திருமண்டங்குடியென்கிற க்ராமத்தில், கலி - ௨௯௮ - வதான ப்ரபவஹு மார்கழிமீ க்ருஷ்ணபக்ஷம்சதுர்த்தசி செவ்வாய்க்கிழமை கூடின கேட்டைநக்ஷத்ரத்தில், ஸ்ரீவைஜயந்தி வநமாலிகாம்சராய், ஸ்ரீவைஷ்ணவசோழியருக்குப் புத்ரராய் ப்ராமஹண வர்ணத்திலே திருவவதரித்தருளினார்.

எம்பெருமான் இவரை விசேஷகடாக்ஷம் செய்தருள, அத்தாலே ஜ்ஞாந பக்தி வைராக்யங்களை நன்றாகவுடையரான இவர்க்கு விப்ரநாராயணர் என்று திருநாமஞ்சாத்தி, காலந்தப்பாமல் சௌளம் உபநயநம் முதலானதுகளையும் பண்ணுவித்து, வேதம் ஶாஸ்த்ரம் முதலான எல்லாவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள்; இவரும், எல்லா வித்யைகளிலும் ஸமர்த்தராய், மிகவும் விரக்தராய், ஸ்ரீரங்கக்ஷேத்ரத்துக் கெழுந்தருளி, அநந்தனென்னும் அணையின்மேல் பள்ளிகொள்ளும் பரவாசுதேவரான அழகியமணவாளரை ஸேவித்தார். இவர் பகவத்விஷயத்தின் வாசியறிந்து பற்றினதையே ஹேதுவாகக்கொண்டு, பெரியபெருமாளும், தம்முடைய க்ருபையாலே, குழலழகர் வாயழகர் கண்ணழகர் என்று சொல்லப்படுகிற தம் வடிவழகைக்காட்டி இவரைத் தம்பக்கலிலே மிகவும் பக்தியுத்தராம்படி கடாக்ஷித்தருளினா. விப்ரநாராயணரும், அரங்கனார்க்காட்செய்யவேணும் என்று துளவத்தொண்டிலே மண்டி, ஸ்ரீபுண்டரீகர் மாலாகாரர் கஜேந்த்ராழ்வான் பெரியாழ்வார் இவர்களைப்போல் நித்யம் திருமாலைகட்டித் திருவரங்கனார்க்குச்சாத்தித் திருநந்தவநம் செய்துகொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில், திருக்கரம்பனூரில் அதிசுந்தரையான தேவதேவி என்றொருவேஸ்யை, நிசுளாபுரியென்னும் உறையூர்க்கு அதிபதியான சோளராஜாவை ஸேவித்துத் திரும்பிவருகிறபோது, வழியில் இளைப்பாறுகைக்காக ஸ்ரீவிப்ரநாராயணர் செய்கிற திருநந்தவநத் திருச்சோலைநிழலிலே ஒருமரத்தடியில் தன்ஸகிகளோடேகூடவிருந்தாள். அத்திருச்சோலையில் அநேகவிதமான பலவ்ருக்ஷங்கள் நிறைந்து எப்போதும் வஸந்தமாயிருப்பதையும், ஸுகந்தமான புஷ்பங்கள் பரிமளம் வீசுவதையும் தேவதேவி கண்டு, தன் தமக்கையுடன் இப்பொழிலின் அழகைச் சுற்றிச்சுழன்றுபார்த்துக் கொண்டாடி, அங்கே விப்ரநாராயணரைக் கண்டார்கள். அவரும், திருமேனியெங்கும் வளர்ந்த மயிரையுடையராய், துளஸீ பத்மாக்ஷமாலையும் த்வாதசோர்

த்வபுண்ட்ரங்களும் தரித்துக்கொண்டு, திவ்யோத்யாநத்திலுள்ள செடிகொடிகளுக்குத் திருமஞ்சனம்பரிமாறுகை முதலான கைங்கர்யத்தில் நிரதராயிருக்க, அதை யிவர்களிருவரும் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; அவரும், தம்கைங்கர்யத்தில் ஊற்றத்தால் இவர்களை முகமெடுத்துப்பாராமல் அநாதரித்திருந்தார். அவ்வளவில், தேவதேவியும் தன்தமக்கையைப் பார்த்து, "இவன் அங்கபூர்த்தியில்லாதவனோ? பைத்தியக்காரனோ? நாம் வந்து முன்னேநிற்க பாராதிருக்கிறானே!" என்ன; தமக்கையும், அவளைக்குறித்து, "ரங்கேசகைங்கர்யத்தில்வைத்த நெஞ்சையுடையராய் மஹாவிரக்தரானவிவர் உன் ரூபஸம்பத்தியைக் காறியுமிழ்ந்திருப்பர், இவரைஉன் புன்சிரிப்பு கடைக்கண்பார்வை முதலானதுகளால் மோஹிப்பித்தாயாகில், நீயே வேஶ்யைகளில் முக்யை; உனக்கு நான் ஆறுமாஸம் தாஸியாயிருக்கிறேன்" என்றாள்; தேவதேவியும், ஸ்வாக்ரஜையைநோக்கி, "இவரை நான் வஶீகரியாவிட்டால் உனக்கு ஆறுமாஸம் வெள்ளாட்டியாவேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, தன் ஸகிகளோடேகூட ஸ்வாக்ரஜையையுமனுப்பி, தன் அலங்காரத்தையும் கழற்றிக்கொடுத்து, ஸாத்விகவேஷம்தரித்து ஆழ்வார் திருவடிகளில் தண்டம்ஸமர்ப்பித்து நின்றாள்.

ஆழ்வாரும் "இதென்ன? பெண்ணே!" என்று கேட்க; இவளும், "வேஶ்யைவயிற்றில் பாபவசத்தாற்பிறந்த என்னை என்தாயானவள் 'எல்லாரையும் அடித்துத் த்ரவியம்ஸம்பாதி' என்றாள், அடியேன் 'முன்பு பாபங்களைப்பண்ணி இஜ்ஜந்மத்தில் பிறந்தது போதாதோ? இன்னம் பாபங்கள் பண்ணிப் படுகுழியில் விழவேணுமோ?' என்று, த்ரவியத்தில் ஜுப்ஸையான அவளைவிட்டு, ரங்கேசகைங்கர்யத்தில்வைத்த நெஞ்சையுடைய தேவரீர் திருவடிகளை ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கலாம் என்று வந்தேன், கதியில்லாத அடியேனைத் திருநந்தவநம் காக்கிற காரியத்தில் நியமித்தால், தேவரீர் பெருமாளுக்குத் திருமாலை ஸமர்ப்பித்து மாதுகரம்பண்ணி யெழுந்தருளுமளவும் காத்திருக்கிறேன்" என்றாள்; அவருமிரங்கியருளி, தன் திருவாராதனமான எம்பெருமானுக்கு பைக்ஷத்தை அமுதுசெய்யப்பண்ணி, தாமுமமுதுசெய்து, அமுதுசெய்தருளின சேஷமுமிரங்கியருளினார். அதின் மற்றைநாள் அவளும் திருநந்தவநத்தில் திருத்துழாய்முதலான பூச்செடிகளுக்குக் குழிகட்டிச்சோதித்துக் கொத்தித் திருமஞ்சநம் பரிமாறிக்கொண்டு இப்படியே ஆறுமாஸம் அநுவர்த்தித்தாள்.

பின்னையும் ஒருநாள் குழிகட்டிச் சோதித்துத் திருமஞ்சநம் பரிமாறிக்கொண்டு வாராநிற்கச் செய்தே, வர்ஷாகாலமானவாறே பெருவர்ஷம் வர்ஷிக்க, விப்ரநாராயணரும்பர்ணசாலையில் சேர்ந்திருக்க, இவளும் இப்பாலிருந்து நனையாநிற்கக்கண்டு "உள்ளே வா" என்றழைக்க; அவளும் உள்ளே புகுந்தவளவிலே' ஈரப்புடவையுடனே யிருக்கிறதைக்கண்டு தம்முடைய உத்தரீயத்தை ப்ரஸாதிக்க; அவளும் தரித்துக்கொண்டு, ஆழ்வாரைப்பார்த்து "திருவடிகளைப் பிடிக்கிறேன்" என்ன; ஆழ்வாரும் அநுகூலிக்க; அவளும்

திருவடிகளைப் பிடியாநிற்கச்செய்தே, "ஸ்வாமி! அடியேனுக்கு ஹிதமாயிருப்பதொருவார்த்தை யருளிச்செய்யவேணும்" என்று மந்தஸ்மிதஞ்செய்து கடைக்கண்ணால் பார்க்க; அவரும் மனங்கலங்கி அவள் கைபிடிக்க; அவளும் "தந்யையானேன்" என்று அவரை காடாலிங்கநம்பண்ணிக்கொண்டு ரமித்து, அவர்மநஸ்ஸைத் தன்விஷயத்தில் மக்நமாம்படி பண்ணினாள். அதின் மற்றைநாள் தன்வீட்டினின்றும் ஆபரணங்களை அழைப்பித்து, ஸர்வாபரண பூஷிதையாய், இவரைத் தன்வசப்படுத்தி மயக்கி, ஒருவரையொருவர் ஒரு க்ஷணமுங்கூடப் பிரிய க்ஷமரன்றியே திருநந்தவநத்திலே யிருந்தார்கள். தம்ஸம்பந்தத்தை ஸஹிப்பித்து, இவரைத் தன்வசவர்த்தியாக்கி, தன்ஸகிகளும் தமக்கையுங்கண்டு ஶ்லாகிக்கும்படி ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றித் தன்வீட்டிற்குவந்து, இவருடைய வர்ணாஶ்ரமதர்மங்களையும் கொலைத்து, ப்ரக்ருதிபரவசராக்கி, சிலகாலம் ரமியாநிற்க; இவரும், மிகவும் விஷயப்ரவணராய், தன் தர்மம் அநுஷ்டாநம் ஸந்திஸாவித்திரியையும் மறந்து, ஸ்த்ரீபோகமே போதுபோக்காக வர்த்திக்க; இவள் "இப்போது நமக்கு நல்ல சமயம் வாய்த்தது" என்று, அவருடைய எல்லா சொத்துக்களையும் அபஹரித்து, "அவர்கையில் இனி தநமில்லை" என்று அறிந்தவாறே தள்ளிவிட்டாள்; இவர், அவள்வீட்டுவாசலில் காத்துக்கொண்டுகிடந்தார்.

அவ்வளவிலே, பெருமாளும் பிராட்டியும் அவ்வீதியிலே யெழுந்தருளாநிற்க; பிராட்டி யிவரைக்கண்டு மந்தஸ்மிதம்பண்ணி, "வேசிவீட்டின் வாசலில் காத்துக்கிடப்பவரார்? "என்று பெருமாளைக்கேட்க; பெருமாளும் பிராட்டியுடனே, "நமக்குப் பூமாலைதரும் விப்ரநாராயணன் வேசியின் வலையிலகப்பட்டு தநத்தையெல்லாமிழந்து அவள்வாசலில் துக்கித்துக்கிடக்கிறான்" என்றருளிச்செய்ய: பிராட்டியும் பெருமாளுடனே "நமக்கு அந்தரங்கரானவர் அப்படிவிஷயாஸக்தரானாலும் அவரை விஷயாசக்தியிலுண்டானபாபத்தைப்போக்கிக் கடாக்ஷித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் பிராட்டிவார்த்தைக்கிசைந்து, தம் பஞ்சபாத்ரங்களில் சுத்தோதகபாத்ரத்தை யெடுத்துக்கொண்டு வேசியின்வாசலில் நின்று "தேவதேவி! கதவைத்திற" என்ன; அவள் "யார்?" என்று கேட்க, "நான் அழகியமணவாளதாஸன், விப்ரநாராயணனனுப்பவந்தேன்" என்ன; தேவதேவியும் சடக்கென்று கதவைத்திறந்து "ஏன்!" என்றுவினவ; பெருமாளும், "விப்ரநாராயணன் உனக்கு இந்தப் பொன்வட்டிலைத் தந்தான்" என்ன: அவளும ஸந்தோஷத்துடன் வட்டிலை வாங்கிகொண்டு "அவரை உள்ளேவரச்சொல்லும்" என்ன: அழகியமணவாளதாஸனும், விப்ரநாராயணரண்டையிற்சென்று "தேவதேவி உம்மை உள்ளேவரச்சொன்னாள்" என்றுசொல்ல; செவிக்கு இனிதான இவ்வார்த்தையை யிவர்கேட்டு ஸந்துஷ்டராய் உள்ளேபுகுந்து, அவளுடன க்ரீடாரதிபரரானார்; பெருமாளும் கோயிலிமலம்பாநது-திருவனந்தாழ்வான்மேல் சாய்ந்தருளினார்.

அவ்வளவில், பொழுதுவிடிந்தவாறே திருக்காப்பைநீக்க, ஸந்நிதியிலிருந்த சுத்தோதகபாத்ரத்தைக் காணாமல், கோயில பரிகரத்தாரடைய பயப்

பட்டு, ராஜகர்த்தர்க்கு அறிவித்தார்கள். நிசுளாபுரியரசன் இச்செய்தியைக் கேட்டு, நம்பியார் பரிசாரகர் எல்லாரையும் அபராததண்டம் வாங்கும்படி உத்தரவுசெய்தான். அப்போது, தேவதேவிவீட்டு வேலைக்காரி ஜலங்கொண்டுவருவதற்காக அங்கேவர, தன்னோடு ஸம்பந்தமுடையானொருவனை பாதிக்கக் கண்டு, "இதுவென்?" என்று கேட்க; சுத்தோதகபாத்ரம் போனதை அவனுக்குச்சொல்ல; அவன் அதைக்கேட்டு, "விப்ரநாராயணன் எங்கள் தேவதேவிக்கு ஒரு பொன்வட்டில் கொடுத்திருக்கிறான், அவர்கள் மெத்தைத்தலைகணையிலே பாத்ரமிருக்கிறது" என்றாள்; அவன் இதைக்கேட்டு ராஜகர்த்தருக்குச் சொன்னான்: உடனே அவர்கள்வந்து இவர்களைப்பிடித்துக்கொண்டு, அவள்வீட்டைச் சோதித்து, வட்டிலையுமெடுத்துக்கொண்டுபோய் ராஜாவுக்குக் காட்டினார்கள். அரசனும், வேசியைக்குறித்து, "பெருமாளுடைமையை நீயிப்படி அபஹரிக்கலாமோ?" என்ன; "நான் பெருமாளதென்றறியேன், இவனது தன் வட்டிலென்று தன் தூதன் அழகிய மணவாளனென்பானொருவன் கையில் கொடுத்தனுப்பினான், அறியாமல் வாங்கினேன்" என்றாள். இவரும், "நமக்கொரு தூதனுமில்லை, நான் வட்டிலையுமறியேன்" என்ன; அவள் "உண்டு" என்ன: இவர் "இல்லை" என்ன: இப்படி யிருவருடைய விவாதத்தைக்கேட்டு, ராஜா, அந்தவேசியை அபராததண்டம்வாங்கி வட்டிலையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, இவரை விசாரித்து தண்டிக்கக்கடவோமென்று காவலில்வைத்துத் தன்வீட்டுக்குப்போனான்—பெருமாள், ராஜாவின் ஸ்வப்நத்திலே யெழுந்தருளி, நடந்த வ்ருத்தாந்தங்களை யறிவித்து, "விப்ரநாராயணர் நிர்தோஷர், தண்டிக்கத்தக்கவரன்று, அவரைவிட்டு முன்புபோலே திருமாலை கைங்கர்யத்தில் நிறுத்தும்" என்று நியமிக்க: சோளபூபதியும், நம்பெருமாள் தனக்கு ஸ்வப்நத்தில் நியமித்தருளினபடியைச் சொல்லி ஆச்சரியப்பட்டு விப்ரநாராயணரை யழைத்துத் தெண்டனிட்டான். இவரும், விஷயாந்தரங்களில் ருசியைக்காறியுமிழ்ந்து, எல்லாபாபங்களுக்கும் ப்ராயச்சித்தமான பகவத்பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரித்து பரிசுத்தரானார்.

அநந்தரம், இவர், க்ராமகுலாதிகளால்வரும் அநர்த்தப்பேரன்றிக்கே, ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாதரேணு (தொண்டரடிப்பொடி) என்றே தமக்குநிலைநின்ற நிருபகமான திருநாமத்தையுடையராய், திருவரங்கர் திருப்பதியை யிருப்பாகப்பெற்று, அழகியமணவாளனையல்லது அறியாதேயிருக்க, இதை தேவதேவி கண்டு, "இவரைப்போலே உஜ்ஜீவிக்கவேணும்" என்று நினைத்து, தன சொத்துக்களையெல்லாம் நம்பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, அவர்ஸந்நிதியில் திருவலகிட்டுக்கொண்டிருந்தாள்.

இவ்வாழ்வார்க்கு பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலைமண்டையிட்டு, "பெரியபெருமாளே ஸர்வவிதபந்து" என்று இவர் திருமந்த்ராநுஸந்தானத்தாலே அநுஸந்தித்தருளி, யமாதிகள் தலையிலே அடியிடலாம்படியான அம்மந்த்ரவைபவத்தைச் சொல்லி ஆதரித்து, ஸ்ரீவைஷ்ணவர்களடியில் முடியை வைத்து, திருமாலைகட்டித் திருமாலைசாத்த நினைத்து, பெரியபெருமாள் ஸ்ரோதாவாகவும் தான் வக்தாவாகவும் திருமாலையை ப்ரகாசிப்பித்தருளி, இச்சரீரத்திலே ஆத்மபுத்தியை நிவர்த்திப்பித்து திருமந்த்ரநிஷ்டராய் தமக்குப் பெருமாளுகந்தக்கின தாஸ்யசேஷத்வத்தை ப்ரார்த்தித்தருளி இப்படி இவ்வர்த்தங்களை யெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி "திருமாலை திருப்பள்ளியெழுச்சி" என்கிற திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்து, லோகத்தை வாழ்வித்தருளினார்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருமாலை.

---

## தனியன்.

(இருவிகற்பநேரிசைவெண்பா.)

திருவரங்கப்பெருமாளரைய ரருளிச்செய்தது.

மற்றொன்றும்வேண்டா மனமேமதிளரங்கர்*
கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ் — உற்ற
திருமாலைபாடும்சீர்த் தொண்டரடிப்பொடியெம்
பெருமானை*எப்பொழுதும்பேசு.

பிரதிபதம்.

மனமே - மனஸே, மற்றொன்றும் - வேறொன்றையும், வேண்டா - அபேக்ஷிக்கக்கடவையல்லை, மதிள்அரங்கர் - ஸப்தப்ராகாரங்களோடுகூடிய ஸ்ரீரங்கத்திறகுசிர்வாஹகரான, கற்றினம்மேய்த்த - கன்றுக்கூட்டங்களைமேய்த்தருளிய, கழலிணைக்கீழ் - உபயதிருவடித்தாமரைகளின்கீழே, உற்ற ஸம்பந்தப்பட்டிருக்கிற, திருமாலை-திருமாலையென்கிறபிரபந்தத்தை, பாடும் - குழைநுபவஞ்செய்யாநின்ற, சீர் - கல்யாணகுணங்களையுடைய, தொண்டரடிப்பொடி - தொண்டரடிப்பொடியாழ்வாரென்னுந் திருநாமத்தைஸஹிதத்ருளிய, எம்பெருமானை - நம்முடையஸ்வாமியை, எப்பொழுதும் - ஸர்வகாலமும், பேசு - அநுஸந்திக்கக்கடவாய்.

---

(கலிநிலைத்துறை)

காவலிற்புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து*
நாவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர் தலைகண்மீதே*
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ!நின்னாமம்கற்ற*
ஆவலிப்புடைமைகண்டா யரங்கமாநகருளானே. (க)

மூவுலகு - ஸகலலோகங்களையும், உண்டு - ப்ரளயாபத்திலேதிருவயிற்றிலேவைத்துரக்ஷித்தது, உமிழ்ந்த - பின்புவெளிநாடு காணப்புறப்படவிட்ட, முதல்வ- ஜகத்காரணபூதனானவனே, அரங்கம்-ஸ்ரீரங்கமென்கிற, மா-மகத்தாகிய, நகருளானே-நகரத்தில்எழு

ந்தருளியிருக்கிற ஸ்வாமீ, நின் - தேவரீருடைய, நாமம் - திருநாமத்தை, கற்ற - ஆசார்யமுகேந அப்யஸித்த, ஆவலிப்புடைமை - செருக்கினாலே, புலன் - பஞ்சேந்த்ரியங்களையும், காவலில்வைத்து - அப்ராப்தவிஷயங்களில்செல்லாதபடி யடக்கி, கலிதன்னை - இந்த்ரியங்களை வசப்படுத்துகைக்கு ப்ரதிபந்தகமான பாபராசியை, கடக்கப்பாய்ந்து - ஸவாஸநமாகப்போக்கி, நமன்றமர்தலைகண்மீது - யமன் தலையிலும் அவன்படர்கள்தலையிலும், நாவலிட்டு - நாவல்கூறிக்கொண்டு, உழிதருகின்றோம்கிடாய் - ஸஞ்சரியாநின்றோம் கிடாயென்கிறார்.

பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங்கண்*
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்கொழுந்தேயென்னும்*
இச்சுவைதவிரயான்போ யிந்திரலோகமாளும்*
அச்சுவைபெறினும்வேண்டே னரங்கமாநகருளானே. (உ)

அரங்கமாநகர் உளானே - ஆச்ரிதார்த்தமாகக் கோயிலிலே வந்து நித்தியவாஸம்பண்ணுமவனே, மா - ச்லாக்கியமான, பச்சைமலைபோல - மரதககிரியையொத்த, மேனி - திருமேனியையும், பவளம் - பவளத்தையொத்த, வாய் - திருவதரத்தையும், கமலம் - தாமரைமலரையொத்த, செம்கண் - சிவந்ததிருக்கண்ணையுமுடையனாய், அச்சுதா - ஆச்ரிதரை யொருக்காலும் நழுவவிடாதவனே, அமரர்ஏறே - அயாவருமமரர்களதிபதியானவனே, ஆயர்தம்கொழுந்தே - இடையருக்கும் பசுக்களுக்கும் நியாமகனானவனே, என்னும் - என்கிற, இச்சுவைதவிர - இப்படியனுபவிக்கும் ரஸத்தைவிட்டு, யான் - திருநாமஞ்சொல்லுகைக்குப் பாங்கானநாவையுடையனானநான், போய் - நெடுந்தூரம்போய், இந்திரலோகம் ஆளும் - பரமபதத்தையாளுகிற, அச்சுவைபெறினும் - அநந்தபோகத்தைக்கிட்டப்பெற்றாலும், வேண்டேன் - விரும்பேனென்கிறார்.

வேதநூற்பிராயம்நூறு மனிசர்தாம்புகுவரேலும்*
பாதியுமுறங்கிப்போகும் நின்றதில்பதினையாண்டு*
பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம்*
ஆதலாலபிறவிவேண்டே னரங்கமாநகருளானே. (௩)

அரங்கமாநகருளானே - திருவரங்கத்திலே வந்து நித்யவாசம்பண்ணுமவனே, மனிசர்தாம் - மநுஷ்யர்கள், வேதம்நூல - வேதசாஸ்திரத்தின்படி, நூறுபிராயம் - நூறுஸம்வத்ஸரம், புகுவரேலும் - ஜீவித்திருப்பார்களேயாயினும், பாதியும் - அதிற்பாதியான ஐம்பதுஸம்வத்ஸரமும், உறங்கிப்போகும் - நித்திரையாலேகழியும், நின்ற - மிகுந்திருக்கிற, இப்பதினையாண்டு - இந்தஐம்பது ஸம்வத்ஸரங்களோவென்றால், பேதை - தாயின் ஆஜ்ஞைப்படி நடக்கும்

குழவிப்பருவமும், பாலகன் - செய்யுந்தீமையைக் கண்டார் கடிய வொண்ணாத பால்யபருவமும், அதாகும் - விஷயப்ரவணனாய்த் திரியும் யௌவந பருவமும், பிணி - மூலையடியே திரிவதா லுண்டான வ்யாதியும், பசி - பஞ்சேந்திரியங்களுக்கும் ஐம்புலனிலுண்டான வாசையும், மூப்பு - கிழத்தனமும், துன்பம் - துன்பமுமாய்த் தலைக்கட்டும்; ஆதலால் - இப்படியிருக்கையாலே, பிறவி - ஹேயமாயிருந்துள்ள ஜந்மத்தை, வேண்டேன் - நான் ஒருக்காலும் விரும்பேன் என்கிறார்.

மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால்*
கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான்*
இத்தனையடியரானார்க் கிரங்குந்நம்மரங்கனாய*
பித்தனைப், பெற்றுமந்தோ! பிறவியுள்பிணங்குமாறே. (௪)

மொய்த்த - மொய்த்துக்கொண்டு கிடப்பதாய், வல் - காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும நசியாததான, வினையுள்நின்று - பாபமாகிறசமுத்ரத்தின் உள்ளே நின்று, மூன்றெழுத்துடைய பேரால் - மூன்றெழுத்தையுடைய கோவிந்தா வென்னும் திருநாமத்தாலே, கத்திரபந்துமன்றே - க்ஷத்ரபந்துவுமன்றோ, பராங்கதி - உத்க்ர்ஷ்ட கதியான பரமபதத்தை, கண்டுகொண்டான் - கண்டனுபவிக்கப்பெற்றான்; இத்தனை அடியரானார்க்கு - மநஸ்ஸஹகார மின்றிக்கே "கோவிந்தா" என்னுந் திருநாமத்தை வாயால் உச்சரிக்குந் தாஸபூதருக்கு, இரங்கும் - இரங்கி க்ருபைசெய்தருளுமவராய், நம் அரங்கனாய - நமக்கு ஸ்வாமியான அழகிய மணவாளனாகிற, பித்தனை - ஸௌசீல்யகுணயுக்தனானவனை, பெற்றும் - கிட்டி அநுபவிக்கப்பெற்றிருந்தும், பிறவியுள் - ஜன்மங்களில் அகப்பட்டு, பிணங்குமாறு - வருந்தும்விதத்தைக்கண்டு, அந்தோ - ஐயோவென்று வெறுக்கிறார்.

பெண்டிராற்சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு*
உண்டிராக்கிடக்கும்போது - உடலுக்கேகரைந்துநைந்து*
தண்டுழாய்மாலைமார்பன் றமர்களாய்ப்பாடியாடி*
தொண்டுபூண்டமுதமுண்ணாத் தொழும்பர்சோறுகக்குமாறே. (௫)

பெண்டிரால் - மனைவியராலே, சுகங்கள் - ஸகலஸுகங்களையும், உய்ப்பான் - அநுபவிப்பதாகக்கோலி, பெரியதோரிடும்பை - மிகப்பெரிதானதுக்கங்களை, பூண்டு - மேற்கொண்டு, இரா - ராத்ரி காலகங்களிலே, உண்டு - புஜித்து, கிடக்குபோது - அணையிலேசாயும்போது, உடலுக்கேகரைந்து - சரீரதாரணத்துக்கேகரைந்து, நைந்து - மநஸ்ஸுசிதிலமாய, தண் - குளிர்ந்த, துழாய்மாலை - திருத்துழாய்மாலையை, மார்பன் - திருமார்பிலேயுடையனானஸர்வே

ச்வரனுடைய, தமர்களாய் - தாஸபூதராய், பாடி - ப்ரீதிக்குப்போக்குவீடாகப்பாடி, ஆடி - அதுதானிருந்தவிடத்திலிருக்கவொட்டாமையாலேயாடி, தொண்டுபூண்டு - சேஷவ்ருத்தியை மேற்கொண்டு, அமுதமுண்ணு - குணாநுபவமாகிற அம்ருதத்தைப்புஜியாத, தொழும்பர் - நீசர், சோறுகக்குமாறு - சோற்றை விரும்பும்வகையேதோவென்கிறார்.

மறஞ்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு*
புறஞ்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர்*
அறஞ்சுவராகிநின்ற வரங்கனார்க்காட்செய்யாதே*
புறஞ்சுவர்கோலஞ்செய்து புட்கவ்வக்கிடக்கின்றீரே. (௬)

மறம் - க்ரௌர்யமாகிற, சுவர் - சுவரை, மதிளெடுத்து - மதிளாகவெடுத்தும், மறுமைக்கு - ஆமுஷ்மிகத்துக்கு, வெறுமை பூண்டு - தாரித்ர்யத்தை மேற்கொண்டும், புறஞ்சுவர் - வெளிச்சுவராய், ஓட்டை - அஸ்திரமான, மாடம் - சரீரமானது, புரளும்போது - தரையில்விழுங்காலத்தை, அறியமாட்டீர் - அறியமாட்டீர்களன்ன; பின்னை செய்கிறதென்னென்னில்; அறம்சுவராகிநின்ற - தாமமேபாக்ருதியாகநின்ற, அரங்கனார்க்கு - கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற அழகியமணவாளனுக்கு, ஆள்செய்யாதே - அடிமை செய்யாதே, புறஞ்சுவர் - வெளிச்சுவரானவுடம்பை, கோலஞ்செய்து - அலங்கரித்து, புள் - பக்ஷிகள், கவ்வ - கவ்வும்படி, கிடக்கின்றீரே - அநர்த்தப்பட்டுக் கிடக்கிறீர்களேயென்று வெறுக்கிறார்

புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம்*
கலையறக்கற்றமாந்தர் காண்பரோகேட்பரோதான்*
தலையறுப்புண்டுஞ்சாவேன் சத்தியங்காண்மின்னையா!*
சிலையினாலிலங்கைசெற்ற தேவனேதேவனாவான். (௭)

கலை - ஸ்ம்ருதிஹாஸபுராணங்களை, அறக்கற்ற - நன்றாக அப்யஸிக்க, மாந்தர் - கூரத்தாழ்வானைப்போல்வார், புலையறம் - நீசதர்மமாய், ஆகி - வைதிகதர்மத்துக்கு விருத்தமாய், நின்ற - பழையதாய்ப்போருகிற, புத்தொடு - பௌத்தமதத்தையும், சமணத்தொடு - க்ஷபணமதத்தையும். எல்லாம் - மற்றமதங்களையும், காண்பரோ - நேத்ராலேதான் ஆராய்வார்களோ; அல்லது, கேட்பரோ - செவியாலேதான் கேட்பார்களோ; அது நிற்கப்ரத்யக்ஷத்திலே, தலை - என் தலையானது, அறுப்புண்டு - அறுக்கப்பட்டாலும், சாவேன் - நான் சாகமாட்டேன்; ஐயா - ஸ்வாமிகளே, சத்தியம் - இந்தப்ரத்யக்ஷமானப்ரத்யக்ஷத்தை, காண்மின் - காணுங்கோள்; சிலையினால் - வில்லினாலே, இலங்கை - லங்கையை, செற்றதேவனே - ஜயிக்கையால் வந்த தேஜஸ்ஸையுடையவனே, தேவனாவான் - ஆச்ரயணீயனாவான்

வெறுப்பொடுசமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள்*நின்பால்
பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகி*
குறிப்பினுக்கடையுமாகில் கூடுமேல், தலையை*ஆங்கே
அறுப்பதேகருமங்கண்டா யரங்கமாநகருளானே. (அ)

அரங்கமாநகருளானே - ஆச்ரிதவிரோதி நிரஸநார்த்தமாகக்கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனே; வெறுப்பொடு - பகவத்விஷயத்தைக்கேட்கப்பொறாதே வெறுத்துப்போகிற, சமணர்- க்ஷமணர்களும், முண்டர் - சைவர்களும், விதியில் - பகவத்ஸமாச்ரயணம்பண்ணி அநுபவிக்கபாக்யமில்லாத, சாக்கியர்கள் - பௌத்தரும், நின்பால் - ஸர்வஸ்மாத்பரனானவுன்விஷயத்திலே, பொறுப்பரியனகள் - பொறுக்கவரியனவாயிருப்பனசிலவற்றை, பேசில் - சொல்லுவார்களாகில், ஸாத்விகன், அதுவே - அவன்நிந்தையே, நோயதாகி - நோயாகி, போவது - முடிந்துபோவான்; அங்ஙனன்றிக்கே, எதிரிகள் நசிக்கும்படி, எனக்கு,—குறிப்பு அடையுமாகில் -. இலக்குவாய்த்து, கூடுமேல் - என்கையில் சிக்கும்படி எனக்கு சக்தியுமுண்டானால், ஆங்கே - பகவந்நிந்தை பண்ணினவிடந்தன்னிலே, தலையையறுப்பதே - அவன் தலையையறுத்துத்தள்ளுகையே, கருமம்கண்டாய் - கர்த்தவ்யங்கிடாயென்கிறார்.

மற்றுமோர்தெய்வமுண்டே மதியிலாமானிடங்காள்!*
உற்றபோதன்றிநீங்க ளொருவனென்றுணரமாட்டீர்*
அற்றமேலொன்றறியீ ரவனையல்லால்தெய்வமில்லை*
கற்றினம்மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரே. (கூ)

மதியிலா - வேதாந்தஜ்ஞானமில்லாத, மானிடங்காள் - மநுஷ்யர்களே, மற்றும் - நான்சொல்லுகிறவனையொழிய, ஓர்தெய்வம்-வேறேயொருபரதேவதை, உண்டே - உண்டோ; உற்றபோதன்றி - உங்களுக்கு ஆச்ரயணீயரான தேவதைகள் ராவணாதிகள்கையிலகப்பட்டு நெருக்குண்ணும்போதல்லது, ஒருவனென்று - ஸர்வாதிகன் ஒருவனுளனென்று, உணரமாட்டீர் - நீங்கள் அறியப்போகிறதில்லை; அற்றம் - உள்ளுண்டானபொருளை, ஒன்று - ஏகம்தசமும், அறியீர் - அறியமாட்டீர்கள்; அவனையல்லால் - அவனையொழிய, தெய்வம் - ஆச்ரயணீயதேவதை, இல்லை - வேறே இல்லை; ஆதலால், நீர் - நீங்கள், கற்றினம்மேய்த்த - கற்றுத்திரளை மேய்த்தவனாய், எந்தை - நமக்கு ஸ்வாமியான க்ர்ஷ்ணனுடைய, இணை - ஒன்றுக்கொன்றொப்பான, கழல் - திருவடிகளை, பணிமின் - ஆச்ரயியுங்கோள்.

நாட்டினான்தெய்வமெங்கும் நல்லதோரருள்தன்னாலே*
காட்டினான்திருவரங்க முய்பவர்க்குய்யும்வண்ணம்*
கேட்டிரேநம்பிமீர்காள்! கெருடவாகநனும்நிற்கச்*
சேட்டைதன்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே. (௧௦)

ரஜஸ்தமஃப்ரசுரர்களுக்கு, எங்கும் - எல்லாவிடத்திலும், தெய்வம் - ஐயன்பிடாரி முதலான தாமஸதேவதைகளை, நாட்டினான் - நிலைநிறுத்தினான்; உய்பவர்க்கு - உஜ்ஜீவநாபேக்ஷையுள்ளவர்களுக்கு, நல்லது - விலக்ஷணமாய, ஓர் - அத்விதீயமான, அருள் தன்னாலே - க்ருபையினாலே, திருவரங்கம்காட்டினான் - கோயிலைக்காட்டியருளினான், நம்பிமீர்காள - பகவத்வ்யதிரிக்த விஷயலாபத்தாலே பூர்ணராயிருப்பவர்களே, சேட்டிரோ - நீங்கள்இவ்வர்த்தத்தைக்கேட்டிகோளே; கெருடவாகநனும்நிற்க - பெரியதிருவடியை வாஹநமாகவுடையவன் இருக்கச்செய்தே, சேட்டைதன்மடியகத்து - மூதேவியிடத்திலுண்டான, செல்வம்பார்த்திருக்கின்றீரோ - தனம்வாங்க விருக்கிறீர்களேயென்கிறார்.

ஒருவில்லாலோங்குமுந்நீரடைத் துலகங்களுய்ய*
செருவிலேயரக்கர்கோனைச் செற்றநம்சேவகனார்*
மருவியபெரியகோயில் மதிற்றிருவரங்கமென்னாக்*
கருவிலேதிருவிலாதீர்! காலத்தைக்கழிக்கின்றீரே. (௧௧)

ஒருவில்லால் - கைக்கெட்டிற்றொருவில்லாலே, ஓங்கு - கொந்தளிக்கிற, முந்நீர் - ஆற்றுநீர் ஊற்றுநீர் வர்ஷஜலம்ஆகிய மூன்றுவகைப்பட்ட நீரையுடைய ஸமுத்திரத்தை, அடைத்து - மலைகளைக்கொண்டு அணைகட்டி, உலகங்கள் - பாதாளம்முதலியலோகங்களிலுள்ளார், உய்ய - வாழும்படி, செருவிலே - ஸேநாயுத்தத்திலே, அரக்கர்கோனை - ராக்ஷஸராஜனை ராவணனை, செற்ற - ஜயித்தருளினவனாய, நம்சேவகனார் - ஆச்ரிதரான நம்முடைய அஞ்சலிக்குந்தோற்குமவரான அழகிய மணவாளன், மருவிய - திருவுள்ளம்பொருந்தி நித்யவாஸம்பண்ணுகிற, பெரிய கோயில் - பெரியகோயிலென்றும் பேரையுடைத்தாய், மதில் - உயர்ந்தமதிளையுடைத்தான, திருவரங்கமென்னா - திருவரங்கமென்று சொல்லாதவர்களாய், கரு - கர்ப்பத்திலுங்கூட, திருவிலாதீர் - பகவத்கடாக்ஷமில்லாதவர்களே, காலத்தை - சர்வேஸ்வரனை ஆச்ரயித்துத் தொண்டுசெய்து வாழுகைக்குக்கண்டகாலத்தை, கழிக்கின்றீரோ - வ்யர்த்தமாகப்போக்குகிறீர்களேயென்று வெறுக்கிறார்.

நமனும்! முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க*
நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி*
அவனதூரரங்கமென்னாதே-அயர்த்துவீழ்ந்தளியமாந்தர்*
கவலையுட்படுகின்றாரென் றதனுக்கேகவர்கின்றேனே. (௧௨)

நமனும் - யமதர்மராஜாவும், முற்கலனும் - முத்கலபகவானும், பேச - ஸம்வாதம்பண்ண, அத்தை, நரகில் நின்றார்கள் - நரகத்திலுள்ளவர்கள், கேட்க - பாபபலாநுபவம்பண்ணுகிற ஸமயத்திலேகேட்க, அத்தாலே, நரகமே - அந்நரகந்தானே, சுவர்க்கமாகும்-

போகபூமியோடொக்க நினைக்கத்தக்க, நாமங்களுடைய - திருநாம ங்களையுடையனுகையாலே, நம்பி - பூர்ணனுயிராநின்றுன்; இப்ப டியிருக்க, திருநாமம்சொலலுகைக்கு யோக்யமான நாக்குப்படை த்த, அளியமாநதர் - அருமருந்தன்ன மநுஷ்யர், அவனதுஊர் - அந்த ஸர்வேஸ்வரன் நித்யவாஸமபண்ணுகிற தேசம், அரங்கம் என்றுது - திருவரங்கமென்றுமல், அயாத்து - அவன் திருநாமங் களைமறந்து, வீழ்நது - விஷயபரவணராய்க் கொண்டு தலைகீழாகவி ழுந்து, கவலையுள்படுகின்ருரொன்று - துக்கத்திலே யகப்படுகிருர்க ளேயென்று, அதனுக்கே - அதற்காகவே, கவர்கின்றேன் - க்லே சப்படாநின்றேனென்கிருர்.

எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம்*
வெறிகொள்பூந்துளவமாலை விண்ணவர்கோனையேத்த*
அறிவிலாமனிசரெல்லா மரங்கமென்றழைப்பராகில்*
பொரியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுநதொழியுமன்றே. (கங)

எறியும் - அலைஎறியாநின்றுள்ள, நீர் - நீரையும், வெறி கொள் - புலால்நாற்றத்தையுமுடைத்தான, வேலை - கடலாலேசூழ ப்பட்ட, மாநிலத்துயிர்களெல்லாம் - மஹாப்ருதிவியிலுள்ள சேதந ரெல்லாரும்; வெறிகொள் - பரிமளத்தையும், பூ - செவ்வியையுமு டைத்தான, துளபமாலை - திருத்துழாய் மாலையையுடையனுன, விண்ணவர்கோனை - * அயர்வறுமமரர்களதிபதியை, ஏத்த - ஸ் தோத்ரம்பண்ணுகைக்கு, அறிவிலா - ஜ்ஞானமில்லாத, மனிசரெ ல்லாம் - மநுஷ்யரெல்லாம், அரங்கமென்றழைப்பராகில் - வாய்ப டைத்த ப்ரயோஜநம்பெற, திருவரங்கம் என்று சொல்லுவர்களா ஞல், பொறியில்வாழ - இந்த்ரியங்களுக்குவசப்பட்டுநடக்கிற, நரக மெல்லாம் - ஸம்ஸாரமெல்லாம், புலமெலழுந்தொழியும் - காம்பா ய்ப்போமென்கிருர்.

வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை*
கொண்டலமீதணவுஞ்சோலை குயிலினங்கூவுஞ்சோலை*
அண்டர்கோனமருஞ்சோலை அணிதிருவரங்கமென்று*
மிண்டர்பாய்ந்துண்ணுஞ்சோற்றைவிலக்கி நாய்க்கிடுமினீரே, (கச)

வண்டினம் - மதுபாநத்தாலே மதித்தவண்டுகள், "தாழை மடலூடுருஞ்சித்தவள வண்ணப்பொடியணிந்து யாழினிசைவண் டினங்கள் ஆளம் வைக்கும்" என்கிறபடியே, ஆளம்வைக்கும் - ஆ ளத்திவையாநின்றுள்ள, சோலை - திருச்சோலைகளையுடைத்தாய, இனம் - இனமினமாக, மயில - மயிலகளானவை, ஆலும் - நர்த்த நம்பண்ணுநின்றுள்ள, சோலை - சோலைகளையுடைத்தாய், கொண்ட ல் - மேகங்களானவை, மீது - மேலே, அணவும் - வந்துபடியாநிற் கும், சோலை - சோலைகளையுடைத்தாய், குயிலினம் - குயிலினங்க

ளானவை, கூவும் - ஒன்றையொன்று அழையாநின்றுள்ள, சோலை- சோலையை யுடைத்தாய், அண்டர் - அண்டாந்தர்வர்த்திகளான தேவர்களுக்கு, கோன்- நிர்வாஹகனான ஸர்வேஸ்வரன், அமரும்- நித்யவாஸம்பண்ணுகிற, சோலை - சோலைகளை, அணி - ஆபரண மாகவுடைத்தான, திருவரங்கமென்னா - திருவரங்கம் என்றுவா யாற்சொல்லாத, மிண்டர்- நன்றிகெட்டவர்களான மூர்க்கர், பாய்ந்து - மேல்விழுந்து, உண்ணும் சோற்றை - உண்கிற சோற்றை, விலக்கி - நீக்கி, நீர் - நீங்கள், அத்தை, நன்றியறியும் குணமுள்ள, நாய்க்கிடுமின் - நாய்க்கிடுங்கோ ளென்கிறார்.

மெய்யர்க்கேமெய்யனாகும் விதியிலாவென்னைப்போல*
பொய்யர்க்கேபொய்யனாகும் புட்கொடியுடையகோமான்*
உய்யப்போமுணர்வினார்கட் கொருவனென்றுணர்ந்தபின்னை*
ஐயப்பாடறுத்துத்தோன்று மழகனாரரங்கமன்றே. (௧௫)

புட்கொடியுடையகோமான் - பெரியதிருவடியைத்வஜமாக வுடையஸர்வஸ்வாமியானவன், என்னைப்போல - என்னைப்போன் ற, மெய்யர்க்கு - அத்வேஷமுடையவனுக்கு, மெய்யனாகும் - மெ ய்யனாயிரா நின்றான்; என்னைப்போல - என்னைப்போன்ற, பொய் யர்க்கு - விமுகரானார்க்கு, பொய்யனாகும் - பொய்யனாயிராநின்றா ன்; உய்யப்போ, முணர்வினார்கட்கு - உஜ்ஜீவிக்கும் வகை தேடவே ணும் என்னும் அறிவுபிறந்தவர்களுக்கு, ஒருவனென்றுணர்ந்தபின் னை - ஸர்வேஸ்வர னொருவனுளனென்கிற ஜ்ஞானம் பிறந்த பின் பு, ஐயப்பாடு - தானே ப்ராப்யனும் விரோதியைப்போக்குவானும் என்கிறவிஷயத்திலுண்டான ஸந்தேஹத்தை, அறுத்து-அறுத்துக் கொண்டு, தோன்றும் - தோன்றுகின்ற, அழகனார் - அழகியவடி வுபடைத்தவனுடையதேசம், அரங்கம் - கோயிலென்கிறார்.

சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம்*
மாதரார்கயல்கணென்னும் வலையுட்பட்டழுந்துவேனை*
போதரேயென்றுசொல்லிப் புந்தியிற்புகுந்து*தன்பால்
ஆதரம்பெருகவைத்த வழகனாரரங்கமன்றே. (௧௬)

சூதனாய் - ஈஸ்வரனும் தர்மாதர்மங்களுமில்லை என்றுசொ ல்லுமவனாய், கள்வனாகி - ஈஸ்வரசேஷமான ஆத்மவஸ்துவையெ ன்னதென்று சொல்லுமவனாய், தூர்த்தரோடு - விஷயாந்தரப்ரவ ணரோடே, இசைந்தகாலம் - பொருந்திப்போந்தகாலத்திலே, மாத ரார்-ஸ்த்ரீகளுடைய, கயல் - கயல்போலே அழகிதான, கண்ணென் னும்-கண்களாகிற,வலையுட்பட்டு-வலையிலேயகப்பட்டு, அழுந்துவே னை - அழுந்திக்கிடக்கிறவென்னை, போதரேயென்றுசொல்லி - வா வென்றுசொல்லி, புந்தியிற்புகுந்து - என்மநஸ்ஸிலேவந்துபுகுந்து, தன்பால் - தன்விஷயத்திலே, ஆதரம்பெருகவைத்த - அன்பை

மிகவும் பெருகப்பண்ணின, அழகன் ஊர் - அழகை நிரூபகமாக வுடையவனுடைய தேசம், அரங்கமன்றே - கோயிலன்றோ வென்கிறார்.

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை*
இரும்புபோல்வலியநெஞ்ச மிறையிறையுருகும்வண்ணம்*
சுரும்பமர்சோலைசூழ்ந்த வரங்கமாகோயில்கொண்ட*
கரும்பினைக்கண்டுகொண்டென் கண்ணிணைகளிக்குமாறே! (கள)

விரும்பி - ஆதரத்தோடே, நின்று - ஒருபடிப்பட நின்று ஏத்தமாட்டேன் - ஸ்தோத்ரம் பண்ணமாட்டாதவனாய், விதியிலேன் - அஞ்சலிபந்தம் முதலிய காயிகவ்யாபாரங்கள் பண்ணாதவனாய், மதியொன்றில்லை - ஸர்வேஸ்வரனொருவனுளனென்று அறியாதவனாய், இரும்புபோல் - இரும்பைப்போலே, வலிய - பலிஷ்டமான, நெஞ்சம் - என்னுடைய மநஸ்ஸானது, இறை யிறை - கொஞ்சம் கொஞ்மாய், உருகும் வண்ணம் - உருகும்படிக்கீடாக, சுரும்பு-வண்டுகள், அமர் - பொருந்தியிருந்துள்ள, சோலைசூழ்ந்த - சோலையாலே சூழப்பட்டிருப்பதாய், மா - ஸ்லாக்யமான, அரங்கம் - திருவரங்கத்தை, கோயில்கொண்ட - வாஸஸ்தானமாகக் கொண்டிருக்குமவனாய், கரும்பினை-கரும்புபோலே ரஸாவஹனானவனை, இணை-ஒன்றுக்கொன்றொப்பான, என்கண் - என்கண்கள், கண்டுகொண்டு - பார்த்தவண்ணமாய், களிக்குமாறே - களித்துப்போரும்படியென்னென்று ப்ரீதரர்கிறார்.

இனிதிரைத்திவலைமோத வெறியும்தண்பரவைமீதே*
தனிகிடந்தரசுசெய்யும் தாமரைக்கண்ணனெம்மான்*
கனியிருந்தனையசெவ்வாய் கண்ணனைக்கண்டகண்கள்*
பனியரும்புதிருமாலோ என்செய்கேன்பாவியேனே. (கஅ)

இனிது - இனிதாக, திரை - திரைகளிலுண்டான, திவலை-சிறுதிவலைகளானவை, மோத - அடிக்க, எறியும் - கிளராநிற்பதாய், தண் - குளிர்ந்திருந்துள்ள, பரவைமீது - ஸமுத்ரத்தை யொத்த காவேரிமத்யத்திலே, தனிகிடந்து - தனியனாய்க் கண்வளர்ந்தருளி, அரசுசெய்யும் - சேதனருடைய அஹங்காரத்தைப்போக்குகிற, தாமரைக்கண்ணன் - புண்டரீகாக்ஷனாய், எம்மான் - என்னையெழுதிக்கொண்ட ஸர்வேஸ்வரனுடைய, கனியிருந்தனைய - கனியையொத்து, செம் - சிவந்திருந்துள்ள, வாய் - திருவதரத்தையும், கண்ணனை - திருக்கண்களையுமுடையவனை, கண்டகண்கள் - காணப்பெற்ற கண்களானவை, பனி - குளிர்ந்த, அரும்பு - ஆநந்தாச்ருக்கள், உதிரும் - ப்ரவஹியாநிற்கையாலே, பாவியேன் - நன்றாக ஸேவிக்கைக்கு பாக்யம்பண்ணாத நான், என்செய்கேன் - செய்யத்தக்க தென்னென்று அநுதபிக்கிறார்.

குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி*
வடதிசைபின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கி*
கடல்நிறக்கடவுளெந்தை யரவணைத்துயிலுமாகண்டு*
உடலெனக்குருகுமாலோ என்செய்கேனுலகத்தீரே. (க௯)

கடல்நிறம் - கடலோடொத்த நிறத்தையுடைய, கடவுள் - ஸர்வேச்வரனாய், எந்தை - என்னை யெழுதிக்கொண்டவன்; குடதிசை - மேலைத்திக்கிலே, முடியை - உபயவிபூதிக்கு மாகச் சூடின திருவபிஷேகத்தை யுடைத்தான திருமுடியை, வைத்து - வைத்தருளி, குணதிசை - கீழைத்திக்கிலே, பாதம் - சேதநர் வாழுகைக்கு இழியும் துறையான திருவடிகளை, நீட்டி - என்னளவும் வர நீட்டி, வடதிசை - ஸம்ஸ்க்ருத முரணான வடதிசையிலுள்ளார்க்கு, பின்பு - பின்னழகை, காட்டி - காட்டியருளி, ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக, தென்திசை - தெற்குத்திக்கிலுள்ள, இலங்கை - லங்கையை, நோக்கி - கடாக்ஷித்துக்கொண்டு, அரவணை - திருவநந்தாழ்வானாகிற திருவணையிலே, துயிலுமாகண்டு - கண்வளர்ந்தருளுகிறபடியைக் கண்டு, எனக்கு - என்னுடைய, உடல் - சரீரமானது, உருகும் - உருகாநின்றது; உலகத்தீரே - லோகத்திலுள்ளவர்களே, என்செய்கேன் - என்னசெய்யப் புகுகிறேன்.

பாயுநீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிக்கொண்ட*
மாயனார்திருநன்மார்வும் மரகதவுருவும்தோளும்*
தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும்*
ஆயசீர்முடியும்தேசு மடியரோர்க்ககலலாமே? (உ0)

பாயும் - பாயாநின்றுள்ள, நீர் - காவேரியால்சூழப்பட்ட, அரங்கந்தன்னுள் - கோயிலிலே, பாம்பணை - திருவநந்தாழ்வான் மேலே, பள்ளிகொண்ட - கண்வளர்ந்தருளுகிற, மாயனார் - ஆச்சர்யசக்தியினுடைய, திரு - பிராட்டியாலே, நல் - விலக்ஷணமான, மார்வும் - திருமார்வும், மரகதம் - மரகதரத்நத்தை யொத்த, உருவும் - திருவடிவும், தோளும் - திருத்தோள்களும், தூய - பரிசுத்தமான, தாமரை - தாமரைமலரையொத்த, கண்களும் - திருக்கண்களும், துவர் - சிவந்த, இதழ் - திருவதரமும், பவளம் - பவளம்போன்ற, வாயும் - திருவாயும், ஆய - பண்டேயாய், சீர் - சீர்மையை யுடைத்தான, முடியும் - திருவபிஷேகமும், தேசும் - ஸமுதாயசோபையும், கண்டால், அடியரோர்க்கு - ஸ்வரூபஜ்ஞான முடையவர்களுக்கு, அகலலாமே - அகலப்போமோ.

பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்குத்*
துணிவினால்வாழமாட்டாத் தொல்லைநெஞ்சே!நீசொல்லாய்*
அணியனார்செம்பொனாய அருவரையனையகோயில்*
மணியனார்கிடந்தவாற்றை மனத்தினால்நினைக்கலாமே? (உக)

பவளம் - பவளம்போன்ற, வாய் - திருவதரத்தையுடைய ஞய், அரங்கனுர்க்கு - கோயிலிலே யெழுந்தருளியிருக்கிற அழகிய மணவாளன் விஷயத்திலே, மனது - மநஸ்ஸை, பணிவிஞலொன் றி - பணிவதாகவொருப்பட்டு, துணிவிஞல் - துணிவிஞலே, வா ழமாட்டா - வாழமாட்டாத, தொல்லை நெஞ்சே - அநாதிகாலமாக பகவத்விஷயத்தையிழந்திருக்கிற நெஞ்சே, நீசொல்லாய் - நீயே சொல்லிக்காண்; அணியினுர் - அழகுமிக்கிருப்பதாய், செம்பொ ஞய - செம்பொன்னுலாகிய, அருவரையனைய - அருமையான ம ஹாமேருவையொத்த, கோயில் - திருவரங்கத்திலே, மணியனுர்- நீலமணியையொத்த அழகியமணவாளர், கிடந்தவாற்றை கண்வளர் ந்தருளுகிற ப்ரகாரத்தை, மநத்திஞல் - மநஸ்ஸிஞலே, நினைக்கலா மே - பரிச்சேதித்தறியலாமோவென்கிருர்.

பேசிற்றேபேசலல்லால் பெருமையொன்றுணரலாகா*
ஆசற்றுர்தங்கட்கல்லா லறியலாவானுமலலன்*
மாசற்றுர்மனத்துளானை வணங்கிநாமிருப்பதல்லால்*
பேசத்தானுவதுண்டோ பேதைநெஞ்சே!நீசொல்லாய். (௨௨)

பேதைநெஞ்சே - அறிவில்லாதநெஞ்சே; பேசிற்று - வேத ங்களும், வைதிகபுருஷர்களும் பேசிப்போந்தவற்றை, பேசலல்லா ல்-சொல்லு மித்தனையொழிய, பெருமை-ஸர்வேச்வரனுடையஸ்வ ரூபகுண விக்ரஹவிபூதிகளிலே, ஒன்று - ஏகதேசமும். உணரல கா - அறியக்கூடாது; ஆசற்றுர்தங்கட்கல்லால் - உபாயாந்தரமாகி ற குற்றமற்றவர்களுக் கல்லது, அறியலாவானுமல்லன் - அறியக் கூடாதவனுயிராநின்றுன்; ஆகையால, மாசற்றுர்மனத்துளானை - தன்பக்கலிலே ஸர்வபாரந்யாஸம் பண்ணியிருக்குமவர்களுடையநெ ஞ்சிலேநித்யவாஸம்பண்ணுகிறவனை, நாம் - அவன் பக்கலிலேஸர் வபாரந்யாஸம் பண்ணினநாம், வணங்கி - அநுபவித்து, இருப்பதல் லால் - தரிக்குமதொழிய, அவன்பெருமையை அநுஸந்தித்தால, பேசத்தானுவதுண்டோ - பாசுரமிட்டுப்பேசக்கூடுமோ நீசொல் லாய் - சாபலம்பண்ணுகிற நீயே சொல்லிக்காணென்கிருர்.

கங்கையிற்புனிதமாய காவிரிநடுவுபாட்டு*
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள்*
எங்கள்மாலிறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைகண்டும்*
எங்ஙனம்மறந்துவாழ்கே னேழையேனேழையேனே! (௨௩)

கங்கையில் கங்காநதியைக்காட்டிலும், புனிதமாய - பரிசுத் தமான, காவிரிநடுவுபாட்டு - திருக்காவேரியின்நடுவில், பொங்கு- பெரியகிளர்த்தியோடேவாராநிற்கிற; நீர் - வெள்ளமானது, பரந்து பாயும் - பலமடைகளிலேபரந்து பாயாநிற்பதாய், அத்தாலே, பூ - புஷ்பித்திருந்துள்ள, பொழில் - சோலைகளாலே சூழப்பட்ட, அரங் கந்தன்னுள் - கோயிலிலேயெழுந்தருளியிருக்கிற, எங்கள் - ஆச்ரி

தரான எங்கள் பக்கல், மால் - வ்யாமுக்தனாய், இறைவன் - ஸர்வ ஸ்வாமியாய், ஈசன் - நியாமகனான அழகியமணவாளன், கிடந்தது - கண்வளர்ந்தருளுகிற, ஓர்கிடக்கை - அத்விதீயமானசயநத்தை, கண்டும் - கண்டநுபவிக்கப்பெற்றபின்பும், ஏழையேன் ஏழையேன் - அதிசபலனானநான், எங்ஙனம் - எந்தப்ரகாரத்தாலே மறந்து - மறந்து நின்று, வாழ்கேன் - ஜீவித்திருக்கப்புகுகிறேன்.

வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுள்*
கள்வனார்*கிடந்தவாறும் கமலநன்முகமும்கண்டும்*
உள்ளமேவலியைபோலு மொருவனென்றுணரமாட்டாய்*
கள்ளமேகாதல்செய்துன் கள்ளத்தேகழிக்கின்றாயே. (உச)

வெள்ளம் - பெரியப்ரவாஹத்தையுடைய, நீர் - காவேரியானது, பரந்து - நாற்புறத்திலும்பரவி, பாயும் - பாய்கையாலே, விரி - விஸ்த்ரிதமான, பொழில் - சோலைகளாலேசூழப்பட்ட, அரங்கந்தன்னுள் - கோயிலிலே, கள்வனார் - ஆச்ரிதர்ஸ்வாதந்த்ர்யத்தை அபஹரிக்குமவரான அழகியமணவாளன், கிடந்தவாறும் - பள்ளிகொள்ளும் ப்ரகாரத்தையும், கமலம் - தாமரைமலர்போலே, நல் - விலக்ஷணமான, முகமும் - திருமுகமண்டலத்தையும், கண்டும் - கண்டநுபவிக்கப்பெற்றும், உள்ளமே - மநஸ்ஸே, வலியை போலும் - நீகடினயாயிராநின்றாய்; ஒருவனென்று- அவன் அத்விதீயனென்று, உணரமாட்டாய் - அறியமாட்டுகிறிலை; இவ்விஷயத்தில், கள்ளமேகாதல்செய்து - க்ர்த்ரிமமாகபக்திபண்ணி, உன்கள்ளத்தே - உன்னுடைய க்ர்த்ரிமச்செய்கையிலேயே, கழிக்கின்றாய் காலத்தைக்கழியாநின்றாயென்கிறார்.

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை*
ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன்*
களிப்பதென்கொண்டுநம்பி!கடல்வண்ணா!கதறுகின்றேன்*
அளித்தெனக்கருள்செய்கண்டா யரங்கமாநகருளானே. (உரு)

குளித்து - நித்யஸ்நாநம் முதலான ஸ்நாநங்களைப் பண்ணி, மூன்றனலை - கார்ஹபத்யம் ஆஹவநீயம்தக்ஷிணாக்நியாகிற மூன்றக்நிகளை ஓம்பும் - ஆதரித்துப்போருமதாய், குறிகொள் - மந்த்ரலோபாதிகள் வாராமே காக்கவேண்டிய, அந்தணமைதன்னை - ப்ராஹ்மண்யத்தை, ஒளித்திட்டேன் - பாழேபோக்கினேன்; என்கணில்லை - என்விஷயமாக எனக்கொன்றுமில்லை; நின்கணும் - உன்விஷயத்திலும், பத்தனல்லேன் - ஸ்நேஹமில்லாதவனாயிராநின்றேன்; இப்படியிருக்க, என்கொண்டுகளிப்பது - நான் எத்தைக்கொண்டு களிப்பது, நம்பீ - சீலாதிகுணபரிபூர்ணராய், கடல்வண்ணா - கடல்போலே கறுத்தநிறத்தையுடையவனாய், அரங்கமாநகருளானே - கோயிலிலே நித்யவாஸம் பண்ணுமவனே, கதறுகின்றேன் - கர்ண

கரமாகக்கூப்பிடாநின்றேன்; எனக்கு - என்னை, அளித்து - உன் க்ர்பைக்குவிஷயமாக்கி, அருள்செய் கண்டாய் - க்ர்பையும் செய்த ருளவேணுங் கிடாயென்கிறார்.

போதெல்லாம்போதுகொண்டு உன்பொன்னடிபுனையமாட்டேன்*
தீதிலாமொழிகள்கொண்டுன் திருக்குணம்செப்பமாட்டேன்*
காதலால்நெஞ்சமன்புகலந்திலே னதுதன்னாலே*
ஏதிலேனரங்கர்க்கெல்லே யென்செயவான்தோன்றினேனே. (உசு)

போதெலாம் - ஸர்வகாலங்களிலும், போதுகொண்டு - புஷ்பங்களைக்கொண்டு, உன் - உன்னுடைய, பொன் - அழகிதான, அடி - திருவடிகளிலே, புனையமாட்டேன் - ஸமர்ப்பிக்கக்ஷமனாகி றிலேன்; தீதிலா - குற்றமற்ற, மொழிகள்கொண்டு - வார்த்தைக ளைக்கொண்டு, உன் - உன்னுடைய, திருக்குணம் - கல்யாணகுண ங்களை, செப்பமாட்டேன் - சொல்லமாட்டுகிறிலேன்; காதலால் - காதலடியாகிற, அன்பு - அன்பை, இதுக்குமுன்பு, நெஞ்சம்கலந் திலேன் - நெஞ்சில்ஸ்பர்சித்ததில்லை; அதுதனாலே - அதினாலே. அரங்கற்கு - அழகியமணவாளனுக்கு, ஏதிலேன் - ஒருகரணத்தா லும் ஸ்பாசிக்கப்பெற்றிலேன்; என்செயவான் தோன்றினேன் - ஏ துக்காகப்பிறந்தேனென்கிறார்.

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துதாம்புரண்டிட்டோடி*
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலம்போலேன்*
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேன்நெஞ்சுதன்னால்*
அரங்கனார்க்காட்செய்யாதே அளியத்தேனயர்க்கின்றேனே. (உஎ)

குரங்குகள் - வாநரவீரர்களானவர்கள், கிஞ்சித்கரித்துஸ்வ ரூபம்பெறுகைக்காக, மலையை - பர்வதத்தை, நூக்க - தள்ளிக்கொ ண்டுவர, தாம் - தாங்கள், குளித்து - நீரிலேமுழுகி, புரண்டிட்டு - கரையிலுள்ள உலர்ந்தமணலிலே புரண்டு, ஓடி - ஸேதுபந்தம் சட க்கெனத்தலைக்கட்ட வேணுமென்கிறத்வராதிசயத்தாலே ஓடி, தரங் கம் - திரையையுடைத்தாய், கிளர்ந்திருந்துள்ள, நீர் - கடலை, அ டைக்கலுற்ற- தூர்க்கையிலே ஒருப்பட்டனவாய், சலமிலா - குற்ற மற்றனவான, அணிலும் - அணில்களையும், போலேன் - ஒவ்வே ன், இதுவன்றியும், மரங்கள்போல - மரங்களைப்போலே, வலிய நெஞ்சம் - கடினசித்தத்தையுடையனாய், வஞ்சனேன் - வஞ்சகப ரனாய், அளியததேன் - அருமந்தமநுஷ்யனான நான், அரங்கனார்க் கு - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனுக்கு, நெஞ்சுதன்னால் - பாவவ்ர்த்தியாலே, ஆட்செய்யாதே - அடிமைசெய்யாமல், அயர்க் கின்றேன் - மறந்து அநர்த்தப்படாநின்றேனென்கிறார்.

உம்பராலறியலாகா வொளியுளார், ஆனைக்காகி*
செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார்*

நம்பரமாயதுண்டே நாய்களோம்*சிறுமையோரா
எம்பிராற்காட்செய்யாதே யென்செய்வான்தோன்றினேனே.(உஅ)

உம்பரால் - ப்ரஹ்மாதி தேவர்களால், அறியலாகா - இப்படிப்பட்டதென்று பரிச்சேதித்தறியவொண்ணாத, ஒளியுளார் - தேஜோமயமான பரமபதத்திலுள்ள ஸர்வேச்வரன், ஆனைக்காகி - திர்யக்காயிருந்துள்ள கஜேந்த்ராழ்வானுக்காக, செம் - சிவந்த, புலால் - மாம்ஸத்தை, உண்டு - புஜித்து, வாழும் - வர்த்திக்கிற, முதலைமேல் - முதலைமேலே, சீறி - பெருங் கோபமுடையராய்க்கொண்டு, வந்தார் - அவன் இடர்பட்ட மடுவின் கரையிலே அரைகுலையத்தலைகுலையவந்தார்; இப்படி ஆச்ரிதபக்ஷபாதியாய ரக்ஷிக்குமவனிருக்க, நம்பரமாயதுண்டே - நம்முடைய ரக்ஷணத்தில் நமக்கொருபரமுண்டோ, நாய்களோம் - நாய்கள்போலே தண்ணியரான நம்முடைய, சிறுமையோரா - குற்றத்தில் கண்வையாதவராய், எம் - நமக்கு வகுத்த சேஷியுமாய், பிராற்கு - உபகாரகனுமாயிருக்குமவனுக்கு, ஆட்செய்யாதே - அடிமை செய்யாமல், என்செய்வான் தோன்றினேன் - எதுக்காகப்பிறந்தேனென்கிறார்.

ஊரிலேன் காணியில்லை உறவுமற்றொருவரில்லை*
பாரில்நின்பாதமூலம்பற்றிலேன் பரமமூர்த்தீ!*
காரொளிவண்ணனே!கண்ணனே!கதறுகின்றேன்*
ஆருளர்களைகணம்மா!அரங்கமாநகருளானே. (உகூ)

ஊரிலேன் - தேவரீர் நித்யஸந்நிதி பண்ணுகிற ஸ்ரீஸாளக்ராமம் முதலான திருப்பதிகளில் பிறவாதவனாய், காணியில்லை - திருப்பல்லாண்டு பாடுகைமுதலானதற்காகவிட்ட காணியாட்சியிலாதவனாய், உறவில்லை - பந்துக்களில்லாதவனாய், மற்றொருவரில்லை - ஸ்நேஹிகளில்லாதவனாய், பாரில் - தண்ணிதான பூமியிலே வஸித்து, நின்பாதமூலம் - உன் திருவடித்தாமரைகளை, பற்றிலேன் - தஞ்சமாகப்பற்றாதவனாயிராநின்றேன்; பரமமூர்த்தீ - பரமசேஷியாய், ஒளி - புகர்மிக்கிருந்துள்ள, கார்வண்ணனே - வர்ஷாகவலாஹகத்தையொத்ததிருநிறத்தையுடையனாய், கண்ணனே - ஆச்ரிதஸுலபனானவனே, கதறுகின்றேன் - பலம் தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன்; அம்மா - ஸர்வஸ்வாமியாய், அரங்கமாநகருளானே - ஆச்ரிதர் கூப்பீடு கேட்கைக்காகக் கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனே, அடியேனுக்கு, களைகண் ஆருளர் - தேவரீரையொழிய ரக்ஷகர் வேறே ஆரிருக்கிறார்கள்; உன்னையொழிய வேறே ரக்ஷகரில்லையென்றுகருத்து, வர்ஷாகவலாஹகம் - மழைக்காலத்துமேகம்.

மனத்திலோர்தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை*
சினத்தினால்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா*

புனத்துழாய்மாலையானே! பொன்னிசூழ் திருவரங்கா!*
எனக்கினிக்கதியென் சொல்லா யென்னையாளுடையகோவே. (கூ௦)

புனம் - தன்னிலத்திற்போலே திருமார்பிலே செவ்வி பெறும்படியான, மாலையானே - திருத்துழாய மாலையையுடையனாய், பொன்னிசூழ் - காவேரியாலே சூழப்பட்ட, திருவரங்கா - கோயிலிலே கண்வளர்ந் தருளுமவனாய், என்னையாளுடையகோவே - என்னை அடிமையாகக்கொண்ட சேஷியானவனே, மநத்தில - மநஸ்ஸிலே, ஓர் தூய்மை- காமக்ரோததாதிகள்இல்லாமையாகிறதூய்மை, இல்லை - இல்லாதவனாய், வாயில் - வாயிலே, ஓரின்சொலஇல்லை- பிறரிடத்துப்ரியமாக வசியாதவனாய், சினத்தினால் - கோபத்தாலே, செற்றம்நோக்கி - பகைமை தோற்றப்பார்த்து, தீவிளிவிளிவன் - மிகக்கொடுமையாக வார்த்தைசொலலா நிற்பன்; இனிதேவரீரை ரக்ஷகமாகப் பற்றினபின்பு, எனக்கு - இப்படிப்பட்ட க்ரூர குணங்களையுடையனான வெனக்கு, கதியென் - போக்கடியென், சொல்லாய் - அருளிச்செய்யவேணும்.

தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன்*
உவர்த்தநீர்போல வென்றனுற்றவர்க்கொன்றுமலலேன்*
துவர்த்தசெவ்வாயினார்க்கே தூவக்கறத்துரிசனானேன்*
அவத்தமேபிறவிதந்தா யரங்கமாநகருளானே. (கூக)

தவத்துளார் தம்மிலல்லேன் - மோக்ஷார்த்தமாக தபஸ்ஸை அநுஷ்டித்தார் கூட்டத்தில சேராதவனாய், தநம்படைத்தாரிலல்லேன் - திருமங்கையாழ்வார் போல்வாரைப்போல பாகவதாராதநத்துக்குத்ரவ்யார்ஜநம் செய்தவர்கள் கூட்டத்தில்சோாதவனாய்; உவர்த்தநீபோல - உவர்நீரைமுகத்திலே இறைத்துக்கொண்டால் அதுகண்விழிக்க வொண்ணாதபடி கரிக்குமாப்போலே, என்றனுற்றவர்க்கு - என்பந்துக்களுக்கு, ஒன்றுமலலேன் - ஒருவகையாலும் நல்லனாய்ப் போந்தேனலலேன்; பின்பு நான்செய்துபோந்தபடியென்னென்னில்; துவர்த்தசெவ்வாயினார்க்கு - மிகச்சிவந்திருந்துள்ள அதரத்தையுடைய ஸ்த்ரீகளுக்கு, தூவக்கற-பாதமற, துரிசனானேன் - கள்ளனாயினேன்; அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே, இபபடிப்பட்டஎனக்கு, பிறவி - ஜந்மத்தை, அவத்தமே தந்தாய், வ்யர்த்தமாகத்தநதருளினீரென்கிறார்.

ஆர்த்துவண்டலம்பும்சோலை யணிதிருவரங்கந்தன்னுள்*
கார்த்திரளனையமேனிக் கண்ணனே! * உன்னைக்காணும்
மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில்துரிசனாய*
மூர்க்கனேன்வந்துநின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே. (கூஉ)

வண்டு - மதுபாநம் பண்ண விழுந்தவண்டுகள், ஆர்த்து - சப்தித்துக்கொண்டு, அலம்பும் - அலையா நிற்பதாய், அணி - ஸம்

ஸாரத்துக்கு ஆபரணம் போன்ற, திருவரங்கந்தன்னுள் - கோயிலி லே கண்வளர்ந்தருளுமவனாய், கார்த்திரளனைய - மேகஸமூஹத் தையொத்த, மேனி - திருமேனியை யுடையனாய், கண்ணனே - ஆச்ரிதஸுலபனானவனே, உன்னைக்காணும் மார்க்கமொன்று - உன்னைப்பெறுகைக்கு ஒருபாயம், அறியமாட்டா- அறியமாட்டாத வனாய், மனிசரில் - மநுஷ்யர்களுக்குள், துரிசனாய - க்ர்த்ரிமனாய், மூர்க்கனேன் - பிடித்தது விடமாட்டாததன்மையனான நான், வந் துநின்றேன்—; மூர்க்கனேன் மூர்க்கனேனே- மிகவும் மூர்க்ககுண முடையேனாயிராநின்றேனென்று தம்முடைய நிஹீனதையையருளி ச்செய்கிறார்.

மெய்யெல்லாம்போகவிட்டு விரிகுழலாரில்பட்டு*
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட போட்கனேன்வந்துநின்றேன்
ஐயனே! அரங்கனே! உன்னருளென்னுமாசைதன்னால்*
பொய்யனேன்வந்துநின்றேன்பொய்யனேன்பொய்யனேனே.(௩௩)

மெய்யெல்லாம்- மெய்யானநினைவையும் மெய்யான்சொல லையும், மெய்யானசெயலையும், போகவிட்டு - கைசோரவிட்டு, விரி - விரிக்கப்பட்ட, குழலாரில் பட்டு - கூந்தலையுடைய ஸ்த்ரீக கள் வலையிலே அகப்பட்டு, பொய்யெல்லாம் - பொய்யென்று பே ர்பெற்றவையெல்லாவற்றையும், பொதிந்துகொண்ட - நிறைத்துக் கொண்டவனாய், போழ்க்கனேன் - அடைவுகேடனாகையாலே, வந் துநின்றேன்; நிர்லஜ்ஜனாய் வந்துநின்றேன்; ஐயனே- எனக்குஸ்வா மியாய், அரங்கனே- கோயிலிலே வந்து கண்வளர்ந்தருளுமவனே, உன்னருளென்னு மாசைதன்னால் - உன்க்ர்பையில் எனக்குண்டா ன ஆசையாலே, வந்துநின்றேன் - வந்தேன்; நான் எப்படிபபட்ட வனென்றால், பொய்யனேன் பொய்யனேன்பொய்யனேன்-எல்லா ப்படியாலும் பொய்யனாகவே யிரா நின்றேனென்கிறார்

உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா*
கள்ளத்தேநானும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம்பூண்டு*
உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதியென்று*
வெள்கிபபோயென்னுள்ளேநான் விலவறச்சிரித்திட்டேனே.(௩௪)

உள்ளத்து - நெஞ்சிலே, உறையும் - எப்போதும் வர்த்திக் கும், மாலை - ஸர்வாதிகனானவனை, உள்ளுவான் - அநுஸந்திக்கை க்கீடான, உணர்வொன்றில்லா - ஆத்மஜ்ஞாநமென்ன பகவத்ஜ்ஞா னமென்ன தேஹஸ்வபாவஜ்ஞானமென்ன இவற்றில் ஒன்றுமில்லா தவனாய், கள்ளததேன் - ஜ்ஞானஹீனனென்று என்னை நாட்டார றியாமல் மறைத்துப்போந்தவனாய், நானும் - ஒருவகை நன்மையு மின்றிக்கே யிருக்கிற நானும், தொண்டாய் - உன்னுடைய அடி மையிலே அந்வயித்தவனாய், தொண்டுக்கே கோலம்பூண்டு - அடி

யான்போல நாமரூபங்களை தரித்து, உள்ளுவாருள்ளுற்றெல்லாம்- அநுஸந்திப்பாரநுஸந்திக்குமதெல்லாம், உடனிருந்தறிதியென்று - கூடவிருந்து அறிவாயென்று, நான்—, என்னுள்ளே - எனக்குள்ளே, வெளகி, லஜ்ஜைப்பட்டு, விலவறச்சிரித்திட்டேன் - விலாக்கொளொடியும்படி சிரித்தேனென்கிறார்.

தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டவெந்தாய் !*
சேவியேனுன்னையல்லால் சிக்கெனச்செங்கண்மாலே !*
ஆவியே!அமுதே!என்றனருயிரனையவெந்தாய்!*
பாவியேனுன்னையல்லால் பாவியேன்பாவியேனே. (௩௫)

அன்று - மஹாபலியாலே அபஹ்ருதமானவன்று, உலகமெல்லாம் - ஸகலலோகங்களையும், தாவி தலைவிளாக்கொண்ட - எல்லார்தலைக்கும் அவ்வருகாம்படி தாவியளந்தருளினவனாய், எந்தாய் - எனக்குசேஷியாய், செங்கண்மாலே - புண்டரீகாக்ஷனான ஸர்வேச்வரனே, உன்னையல்லால் சேவியேன் - உன்னையொழிந்தவர்களுக்கு ஆட்செய்யேன்; ஆவியே - எனக்குப்ராணபூதனாய, அமுதே - அம்ருதம்போலே ரஸாவஹனாய், என்றனருயிரனைய - என்னருமந்தப்ராணனுக்கு அநதராத்மாவாய், எந்தாய் - என்ஸ்வாமியானவனே, பாவியேன் பாவியேன் - மஹாபாபியான நான், உன்னையல்லால் - உன்னையொழிய, பாவியேன் - புறம்பொருவரை நெஞ்சாலும் நினையேனென்கிறார்.

மழைக்கன்றுவரைமுன்னேந்தும் மைந்தனே!மதுரவாறே!*
உழைக்கன்றேபோலநோக்க முடையவர்வலையிற்பட்டு*
உழைக்கின்றேற்கென்னை நோக்காதொழிவதே,உன்னையென்னை
அழைக்கின்றேன்*ஆதிமூர்த்தி!அரங்கமாநகருளானே. (௩௬)

மழை - இந்த்ரனேவின ஸம்வர்த்தகமென்கிற மேககணங்களாலே, அன்று - இடையரும் பசுக்களும் வருந்தினவன்று, வரை - கைக்கெட்டிற்றொருமலையை, முன் - அவை நலிவுபடுவதற்கு முன்னமே, ஏந்தும்-தரித்த, மைந்தனே - பெருமிடுக்கனாய், மதுர ஆறே - இனிதான நதியையொத்தவனே; உழைக்கன்றேபோல நோக்கமுடையவர் வலையில்பட்டு - மான்கன்றை யொத்த விழியையுடையரான ஸ்த்ரீகளுடைய வலையிலே,அகப்பட்டு, உழைக்கின்றேற்கு - துடிக்கிறவனான, என்னை-, நோக்காதொழிவதே - கடாக்ஷியாதொழிகிறாயே; ஆதிமூர்த்தி - ஜகத்காரணபூதனாய், அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே, உன்னை-ரக்ஷ்யவர்க்கம் தேடித்திரிகிற தேவரீரை, அழைக்கின்றேன் - ரக்ஷகாபேக்ஷையுடையனாய்க்கொண்டுகூப்பிடாநிற்க, என் - ரக்ஷித்தருளாமல் தாமஸிப்பதற்கு ஹேதுவென்னென்கிறார்.

தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துளோங்கும்*
ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார்*

எளியதோரருளுமன்றேயென்றிறத்தெம்பிரானூர்*
அளியநம்பையலஎன்னார் அம்மவோ! கொடியவாறே. (௩எ)

தந்தையும் தாயுமாவார் - ஹிதபரனை தமப்பனும் ப்ரியபரையான தாயு மாவார்; தெளிவிலா - தெளிகைக்கு அவகாசமில்லாதபடி மேன்மேலும் பெருகுகையாலே, கலங்கல் - கலக்கம்மாறுத, நீர்சூழ் - காவேரியால் சூழப்பட்ட, திருவரங்கத்துள் - கோயிலிலே, பரமபதத்தினின்றும் இங்குவந்தபின்பு, ஓங்கும் - மிக்குவருகிற, ஒளியுளார் தாமே யன்றே - தேஜஸ்ஸையுடையவரன்றோ; என்திறத்து - அவர்என்விஷயத்தில் பண்ணவேண்டுவது, எளியதோரருளன்றே - ஒருக்கால் குளிரநோக்குவ திந்நனையன்றோ; எம்பிரானூர் - எனக்கு உபகாரகரானவர், நம்பையல் - நம்முடையபையலான இவன், நம் அளியன் - நம்முடைய க்ருபைக்கு பாத்ரபூதன், என்னார் - என்று ஒருவார்த்தைசொல்லுகிறாரில்லை; அம்மஓ! கொடியவாறே - ஆர்த்தத்வநிகேட்டும் கண்ணுறங்குவதே! இவர்ஸ்வபாவம் மிகக்கொடிதாயிராநின்றதே! யென்கிறார்.

மேம்பொருள்போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து*
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி*
காம்பறத்தலைசிரைத்துன்கடைத்தலையிருந்து*வாழும்
சோம்பரையுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே. (௩அ)

சூழ்புனல் - காவேரியால்சூழப்பட்ட, அரங்கத்தானே- கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; மேம்பொருள் - மேன்மையை விளைக்கக்கடவதான ப்ராக்ருதபதார்த்தங்களை, போகவிட்டு - ஸவாஸநமாகப்போக்கி, மெய்ம்மையை மிகவுணர்ந்து - ஆத்மாவை உள்ளபடியறிந்து, ஆம்பரி சறிந்துகொண்டு - சேதநனுக்கு கைங்கர்யமே புருஷார்த்தமென்பதை யறிந்து, ஐம்புலன் - பஞ்சேந்த்ரியங்களையும், அகத்து அடக்கி - விஷயாந்தரங்களில் போகாமேதம்முள்ளே அடக்கி, காம்பு அற-உபாயாந்தரங்களில் தமக்குண்டானஸம்பந்தமற, தலைசிரைத்து - தம்பக்கலுண்டான துரிதங்களைப்போக்கி, உன் தலைக்கடை - உன் திருவாசலிலே, இருந்து - ஸுப்ரதிஷ்டிதரா யிருந்து, வாழும் - வாழுமவராய், சோம்பரை - ஸ்வஹிதத்தில் சோம்பினவர்களை, உகத்திபோலும் - உகக்குமவனல்லையோ வென்கிறார்.

அடிமையில்குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில்*
குடிமையில்கடைமைபட்ட குக்கரில்பிறப்பரேலும்*
முடியினில்துளபம்வைத்தாய மொய்கழற்கன்புசெய்யும்*
அடியவரையுகத்திபோலு மரங்கமாநகருளானே. (௩௯)

துளபம் - திருத்துழாய்மாலையை, முடியினில்வைத்தாய் - திருவபிஷேகத்திலே சாத்தியருளி, அரங்கமாநகருளானே - கோ

யிலிலே கண்வளர்ந்தருளுமவனே; அடிமையில் குடிமையில்லா - ஸர்வேச்வரனை வுனக்கு அடிமைசெய்கையே புருஷார்த்தமென்று நினையாதவர்களாய், அயல் - அநுக்கசலாக, சதுப்பேதிமாரில் - ரிச்யஜுஸ்ஸாமா தர்வணமாகிற நான்குவேதங்களை அத்யயநம்பண்ணினவர்களைக் காட்டிலும், குடிமையில் கடமைபட்ட - அடிமை செய்யப்ராப்தியுடையராய், குக்கரில பிறப்பரோலும் - பஞ்சமஜாதியிலும் தாழ்நத குலத்திலே பிறந்தவர்களேயானாலும், மொய் - நெருங்கின, கழற்கு - உன்திருவடிகளிலே, அன்புசெய்யும் - அந்தரங்கவ்ர்த்திபண்ணுகிற, அடியனை - தாஸபூதனை, உகந்தி - உகக்குமவனன்றோ நீயென்கிறார்.

திருமறுமார்வ! நின்னைச்சிந்தையுள்திகழவைத்து*
மருவியமனத்தராகில் மாநிலத்துயிர்களெல்லாம்*
வெருவுறக்கொன்றுசுட்டிட் டீட்டியவினையரேலும்*
அருவினைப்பயனதுய்யார் அரங்கமாநகருளானே. (சஂ)

திரு - பெரியபிராட்டியாரையும், மறு- ஸ்ரீவத்ஸம் என்கிற மறுவையும், மார்வ - திருமார்விலே யுடையனை, அரங்கமாநகருளானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; மாநிலத்துயிர்களெல்லாம்-இந்த மஹாப்ர்திவியிலுள்ளவர்களெல்லாரும், வெருவுற - ஜநக்தனடைய நடுங்கும்படி; கொன்று - கொன்றும், சுட்டிட்டு - சுட்டும், இவ்வகைகளாலே, ஈட்டிய - ஸம்பாதித்த, வினையரேலும்- பாதகங்களை யுடையரேயானாலும், நின்னை - ச்ரியபதியானவுன்னை, சிந்தையுள் - தங்கள் நெஞ்சிலே, திகழவைத்து விளங்கும்படிவைத்து, மருவியமனக்கராகில் - த்ர்டாத்யவஸாயத்தை யுடையராயிருப்பரேயானால், அவர்கள், அருவினைப்பயனதுய்யார் - மஹாபாதகங்களுடைய பலத்தை, அநுபவிக்கமாட்டார்களென்கிறார்.

வானுளாரறியலாகா வானவா! வென்பராகில்*
தேனுலாந்துளபமாலைச் சென்னியா! வென்பராகில்*
ஊனமாயினகள்செய்யு மூனகாரகர்களேனும்*
போனகம்செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே. (சக)

ஊனமாயினகள் செய்யும் - தாங்கள் பிறரைக் கொல்லுவதன்றிக்கே, ஊனகாரகர்களேனும் - பிறரையிடுவித்து ஹிம்ஸிப்பவர்களா யிருந்தார்களேயாகிலும்; வானுளார் - உபரிதநலோகங்களிலுள்ள ப்ரம்மாதிகளாலே, அறியலாகா - இப்படிப்பட்டதென்று பகுத்தறியவொண்ணாத, வானவா - பரமபதத்திலே நித்யவாஸம் பண்ணுமவனே, என்பராகில்- என்று சொல்லுவாராய், தேன்உலாம் - மதுஸ்ரவியாநின்றுள்ள, துளபமாலை - திருத்துழாய்மாலையை, சென்னியா - திருமுடியிலே யுடையவனே, என்பராகில் - என்று சொல்லுவார்களேயானால், போனகம்செய்த சேடம் - அவர்கள்

அமுதுசெய்து மிருந்தப்ரசாதம், தருவரேல் - க்ர்பைசெய்து கொடுப்பார்களேயாகில், அன்றே - அப்போதே, புனிதம் - பரிசுத்தராவர்கள்.

பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள்*
இழிகுலத்தவர்களேனு மெமமடியார்களாகில்*
தொழுமினீர்கொடுமின்கொண்மி னென்றுநின்னோடொக்க*
வழிபடவருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே. (சஉ)

மதிள் - திருமதிளாலே சூழ்ந்த, திருவரங்கத்தானே - கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே; ஒழுகல - ப்ரம்மாதொடங்கித் தங்களளவும் நீண்டுவருகிற, ஆறு பரம்பரையில், பழுதிலா - குற்றமின்றிக்கே யிருக்குமவர்களாய், பலசதுப்பேதிமார்கள்- நான்குவேதங்களையும் அத்யயநம் பண்ணிப்போருமவர்களே; எம்மடியார்களாகில்- நம்மடியாரென்று அபிமாநிக்கலாம்படி யிருக்குமவர்கள், இழிகுலத்தவர்களேனும் - நிஹீனகுலத்தில் பிறந்தார்களேயாகிலும், நீர் - நீங்கள், தொழுமின் - அவர்களைத்தொழுங்கோள்; கொடுமினென்று- உங்கள் பக்கலுள்ள விசேஷார்த்தங்களை அவர்களுக்கு உபதேசியுங்கோளென்றும்; கொள்மினென்று - அவர்களிடத்தில் விசேஷார்த்தங்களுண்டாகில் கேட்டு க்ர்தார்த்தராகுங்கோளென்றும், எனக்குமேல் பூஜ்யரில்லாமையாலே, என்னோடொக்க - எனக்கு ஸமாநமாகவாகிலும், வழிபட - அவர்களை ஆராதித்துநல்வழிபோம்படி, அருளினாய் - க்ர்பைசெய்தருளினாயென்கிறார்.

அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதி*
தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேனும்*
நுமர்களைப்பழிப்பாராகில் நொடிப்பதோரளவில்*ஆங்கே
அவர்கள்தாம்புலையர்போலுமரங்கமாநகருளானே. (சங)

அரங்கமாநகருளானே - கோயிலிலேவந்து சண்வளர்ந்தருளுமவனே; ஓர்-அத்விதீயமான, அங்கமாறும்-ஆறுவேதாங்கங்களையும், ஓர் - அத்விதீயமான, வேதம்நான்கும் - நான்குவேதங்களையும், அமர - ஸாவதாநமாக, ஓதி - அத்யயநம்பண்ணி, தமர்களில் தலைவராய - தாஸபூதரில் அக்ரேசரரான, சாதிஅந்தணர்களேனும்- ப்ராஹமணவர்ணத்திலே பிறந்தவர்களேயானாலும், நுமர்களை - தேவரீருடைய தாஸபூதரை, பழிப்பராகில் - அவர்களுடைய ஜந்மவர்த்தங்களைப்பார்த்து தூஷிப்பராகில, ஆங்கே- அப்போதே, நொடிப்பதோரளவில் - அந்தக்ஷணத்திலேயே, அவர்கள்தாம் - அவர்கள், புலையர்போலும் - சண்டாளர்களாவரென்கிறார்-

பெண்ணுலாம்சடையினானும் பிரமனுமுன்னைக்காண்பான்*
எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப*

விண்ணுளார்வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த*
கண்ணறா*உன்னையென்றோ களைகணாக்கருதுமாறே. (சச)

பெண் - கங்கையானவள், உலாம் - ஸஞ்சரிக்கிற, சடையினானும் - ஜடையையுடையனான ருத்ரனும், பிரமனும் - ப்ரஹ்மாவும், உன்னை - ஸர்வஸ்மாத்பரனான வுன்னை, காண்பான் - இப்படிப்பட்டவனென்று பரிச்சேதித்தறிகைக்காக, எண்ணிலாவூழியூழி - நெடுங்காலமாக, தவஞ்செய்தார் - தபஸ்ஸுபண்ணி, வெள்கிநிற்க - காணக்கிடையாமையாலே வீணே தபஸ்ஸிலே யிழிந்தோமென்று லஜ்ஜித்திருக்க, விண்ணுளார் - நித்யஸூரிகள், வியப்ப - விஸ்மயப்படும்படி, அன்று - முதலையின்கையிலே அகப்பட்டு வருந்தினபோது, ஆனைக்கு - ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுக்கு, அருளையீந்த - அவன் கையில் பூ செவ்வியழிவதற்கு முன்னே திருவடிகளிலே யிட்டுக் கொண்டருளின, கண்ணறா - நிர்த்தயனானவனே, உன்னை - இப்படிப்பட்டவனானவுன்னை, களைகணா - தஞ்சமாக, கருதுமாறு - நினைக்கும் ப்ரகாரம், என் - யாது, இப்படிப்பட்ட தயையுடையனானவுன்னையொழியவேறே ரக்ஷகரார் என்று கருத்து.

வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள்*
கவளமால்யானைகொன்ற கண்ணனை அரங்கமாலை*
துளவத்தொண்டாயதொல்சீர் தொண்டரடிப்பொடிசொல்*
இளையபுன்கவிதையேலு மெம்பிரார்க்கினியவாறே. (சரு)

வளவெழும் - அழகுமிக்கிருப்பதாய், தவளம் - மிகவும் வெண்மையான, மாடம் - மாடங்களையுடைத்தான, மதுரைமாநகரந்தன்னுள் - ஸ்ரீமதுராநகரத்திலே, கவளம் - கபளங்கொண்டிருப்பதாய், மால் - பெருத்திருந்துள்ள, யானைகொன்ற - குவலயாபீடமென்கிற யானையை நிரஸித்த, கண்ணனை - ஆச்ரிதஸுலபனாய், அரங்கம் - கோயிலிலே பள்ளிகொண்டருளுமவனாய், மாலை - ஆச்ரிதவிஷயத்தில் பெரும்பித்தனானவனை, துளபத்தொண்டாய - திருத்துழாயாழ்வார்க்கு அடிமைசெய்து போருமவராய், தொல்சீர் - ஸ்வாபாவிகமான பகவச்சேஷத்வத்தின் எல்லையிலே நின்றவரான, தொண்டரடிப்பொடி - தொண்டரடிப்பொடியாழ்வார், சொல் - அருளிச்செய்த திருமாலையாகிற ப்ரபந்தம், இளைய - சப்தத்தில் இளையதாய், புன்கவிதையேலும் - கவித்வத்தில் குற்றமுடையதாகவிருந்தாலும், எம்பிராற்கு - எனக்கு உபகாரகரான பெரியபெருமாளுக்கு, இனியவாறே - இனிதாயிருந்தபடி யென்னென்று ஈடுபடுகிறார்.

திருமாலை - ப்ரதிபதம்

ஸம்பூர்ணம்

---